# 28
# உம்பளாயி

முழங்கால் அளவு ஊத்தம் போட்ட சேற்றில் பாவாடையை தொடைக்கு மேல் தூக்கி இடுப்பில் வரிந்து போக்கு காட்டிக் கொண்டிருந்த அந்த ஒத்த கண்ணு வெறாமீனை பாயசம் போல் ததும்பிக்கிடந்த சேற்றை, காலாலும், கையாலும், அளைந்து அளைந்து தரையில் விசிறி அடித்து தேடிக் கொண்டிருந்தாள், உம்பளாயி. உம்பளாயிய தெரியாது. ஆதிரியார் வூட்டு பொண்ணு அவ! தூரத்துக் களத்து மேட்டுல மேக்குடியார் நின்னுகிட்டு இருந்தாரு. யானைக்கால் மாதிரி ஒவ்வொரு தொடையும் பெரிசு பெரிசாய் இம்மாந்தூரத்திலிருந்தே தெரியறது! ''பீமன் மாதிரி இருக்கு. மேக்குடியார் பார்வை ஒண்ணும் சரி கிடையாது, உம்பளாயிக்குத் தெரியும். வயசு அறுபது ஆனாலும் துப்பு கெட்டவன். மாமன் உறவு கொண்டாடிக்கிட்டு போற சோட்டுல வர்ர சோட்டுல கையப் போடுற ருசி ரொம்ப உள்ள பய! ஆனா இந்த வெறா மீனு மாதிரிதான்! அந்த லக்லே தண்ணீல வெறா புடிக்கலாம், சேத்து வெறா புடிக்கிறதுக்கு ரொம்ப நீக்கு போக்கு வேணும்? வூட்டு கெழவி கூட சொல்லும். அந்தி மசங்கல்ல களத்துப் பக்கம் போகாதடி! மேக்குடியான் அங்கு நின்னுகிட்டு ஊறுகா மட்டய தட்டிக்கிட்டு இருப்பான். அப்புறம் ''ஆ'' ன்னா போச்சோ ''ம்'' ன்னா போச்சோ? அப்புறம் இடுப்ப புடிச்சிக்கிட்டு நகர்ந்து கிட்டு இருப்ப! அப்படிங்கும். ஏன் நீ தான் கொட்டைய பிதுக்குகேன் யார் வேண்டாம் என்று கத்துவாள். உம்பளாயி ''யாங்! மாங் இப்படியே பாத்துக்கிட்டேயிருக்க! கருத்தப் பொட்டக்கண்ணு தெரியாது. சேத்துல முழுங்து! முழுந்து! முழந்துமிதி! - என்று கத்தினான். காவுத்தான் வரப்பில் நின்று கொண்டு - யாண்டால! எழவு எடுத்த பயலே! இது எங்களுக்குத் தெரியாதா? வெற மீனு பாச்சல எனக்கு கத்துக்குடுக்கிறீக? என்றாள் உம்பளாயி. காவுத்தனுக்கு அறுபது வயது இருக்கும். இந்த நாட்டுப் பள்ளவநுவல்லேயே மூத்தப்பள்ளன்! உம்பளயாய்க்கு வயது பதினெட்டுக்குள்ள! அது போடுற போடு இந்தப் போடா இருக்கு! கட்டத்துரைத்துப் போச்சாடா எனக்கு? நீ போட்ட கூப்பாட்டுல மீனு உள்ள போய்டுச்சிடா? நண்டு நத்தை திங்கிற புத்தி ஒன்ன வுட்டு போவுதா என்றபடி அளைந்த சேற்றையே மறுபடியும் காலால் அளைந்தாள்'' நறுக்கென்று காலில் உரசிப் பாய்ந்தது வெறா. உம்பளாய் களைத்திருந்தாள். உடம்பு முழுக்கவும் வேர்வை கடலாக வழிந்து கொண்டிருந்தது. மூணு நாளா இந்த வெறா மீனு அவள நொங்க புட்டு புரட்டுது. அம்மாகூட சொல்லிச்சு ''எட்டுப்பட்டிமுண்டே இப்படி பாவாட தாவணியோட கௌம்பி போறீயேடி? ஒண்ணப்பார்த்தா பறவூட்டுப் பொண்ணு மாதிரியிருக்கு சட்டை போடாம, லவுக்க போடாம இப்படி

காலையிலேயிருந்து சாயங்காலம் வரைக்கும் சேத்த உடம்புல வாரி பூசிக்கிட்டு அப்படி மீனை தின்னாட்டி ஆவலியா? ஒப்பன் பார்த்தான்னா என்ன வகுந்துபுட்டுதான் மறுவேலை பாப்பான். நீ 'ஒக்காந்து' ஒம்பது வருஷமாச்சு இன்னும் எந்திரிக்கல. ஏம் பிராணன வாங்குற. எல்லாம் அந்த கெழவி குடுக்கிற கெப்புறு. நீ அந்த ஆட்டம் ஆடற. மீனு திங்கிறதுன்னா இப்படியா அலைவா ஒரு பொண்ணு. விடிஞ்சா போதும் ஓட்டு சில்லு ஒண்ணக் கையில் எடுத்துக்கிட்டு வய வயலா எறங்கிர்ற, மானங்கெட்ட சிறுக்கி'' உம்பளாய்க்கு தொண்டையை அடைத்துக் கொண்டது அழுகை! இப்போதுவரத் தொடங்கியது. அப்போது அல்ல! உம்பளாய் கொஞ்சம் திமிரான அழகுதான்! என்னத்துக்கு இப்படி பாக்கிறாய் என்று அடிக்கடி காறித் தப்புவாள். முதுகுக்கும் பின்னால் எப்பவும் ஊர்ப்பசங்க வயசுவித்தியாசம் இல்லாமல் குஞ்சு குளுவான்ல்ல இருந்து, நண்டுசிண்டுல இருந்து கிண்டு கெழங்கட்ட வரைக்கும் இப்படியா பார்ப்பானுவ! துள்ளுதுன்னு? யாராவது சொன்னா போதும்! அடுத்த நிமிஷம் போட்டது போட்டபடி போட்டுபுட்டு ஊத்தங்கூடையைத் தூக்கிட்டு மேக்கால் வயல்ல இருட்டுன்னு பாக்காம, எறங்கி வெறால புடிச்சிருவா! தேளிமீனு கூட அங்க மேயும். கடிச்சிதுன்னா கடுப்பு அடங்க அடுத்த நாளாகும். ஆம்பள வளேயே கொஞ்சம் அசத்துற மடுவு உத்தாண்டயான் மடுவு. இவளேயே கொஞ்சம் அசத்துற ஏறங்கிறதுக்கு பயப்படுவாங்க. மூணு ஆளு, நாலு ஆளு ஆழம் இருக்கும். மீனு மடுவுல இருக்காதுன்னு சொல்வாங்க. நீளமா கட்டிவுட்டு இருக்கிற சிமிண்டு கட்டையில தண்ணி கணுக்கால் அளவு பரவி ஓடற இடம் அது. பெரிய வெறா மீனு நாலு ஐய்ந்து சிமெண்டு கட்டையில மேலே ஏறி மேஞ்சுகிட்டே எகிறி நீஞ்சும். பாக்கிறதுக்கு கண்ணு கொள்ளாது. யாரும் புடிக்க முடியாது. மேஞ்ச ரப்பு ராங்கியில பாசி தரையிலே மேல மேல மேயும். அந்த உழுவம் பாசி அப்படின்னா வெறாலுக்கு ரொம்பப் பிடிக்கும், அந்த மீனு ருசி உம்பளாய்க்குத்தான் தெரியும். மடுவுக்குள்ள நீஞ்சுச்கிட்டே பரிகூடயால மீன அலாக்கா அமுக்கணும். கொஞ்சம் அசந்தா மடுவுக்குள்ளே சொழண்டு கிட்டுயிருக்கிற தண்ணிக்குள்ள போயி சொழல்ல மாட்டிக்கிற வேண்டியதுதான். அப்புறம் வுட்டா மெதக்கணும்! ஒரே அழுத்தல் நாலு வெறா மீனையும் அமுக்கிட்டு கூடையோட மடுவுல இருந்து ஒரு எவ்வல்ல கரையேறிடுவா உம்பளாய். ஆனா அவள்ட்டேயே இந்த ஒத்த கண்ணு வெற பத்து நாளா போக்கு காட்டுது! தண்ணி எறச்சாச்சு நாலு பள்ளனுவவுட்டு, பரிகட்டியாச்சு வா மடையையும் பூட்டியாச்சு எட்டுக்கு பத்து சைசுல இருந்த வயசு குறுக்கி ஒரு குழிக்குள்ள கொண்டு வந்தாச்சு! ஆனா மீனு அம்புட்ட பாடு இல்ல. மீனு தண்டுனதுல மீனு எளசுன்னு நல்லா தெரியாது ஆனா அளவு பெரிசு. கடல் வஞ்சரம் மாதிரி நீளம்! வலுவான ஊக்கவுள்ள மீனு. நல்ல கருத்த நிறம் நல்ல பளபளன்னு கரும் பலிங்கி மாதிரி பெரிய, பெரிய செதிலோட பார்க்கவே களையான மீனு! வெட்டித்துண்டம் போட்டா இருபத்தைந்து துண்டு ரெண்டு குடும்பம் சாப்புடலாம். இப்படி மீனு கோலிக்கிட்டு நிக்கிறதா உம்பளாயின்னு தெரிஞ்சா ஆதிரியாரு சும்மாவுட மாட்டாரு, அந்த பக்கம்

ஆதிரியாரு வூட்டவுட்டு வயலுக்கு எறங்கினா இந்த பக்கம் உம்பளாய் மதகுல இறங்கிடுவா! இந்தப் பக்கம் அஞ்சனியிலிருந்து நார்த்தங்காரு மேல? அடிவாசல் வரைக்கும் ஒரு வா மாட உயர்ந்து இல்ல, உத்தங்கள் ஒண்ணையும் மிச்சம் வைத்கிறதும் இல்லை. ராத்திரி பகல்ன்னு நேரம் கிடையாது. மாசி பங்குனியில ஆத்துல தண்ணி குறைய ஆரம்பிச்சிடுச்சின்னா உம்பளாய்ப் பாடு கொண்டாட்டம்தான். கோயில் குளம் வரைக்கும், பள்ளங்குடி, பறக்குடி மேடு வரைக்கும் ஆதியாரு மானங்கெட்ட மாதிரி சத்தம் போடுவாரு. மீனுகாரங்க மீனுக்காக ஆதிரியார் ஊட்டு வாசல்ல வந்து பணத்தை வாங்கிட்டு போவாங்க, மீனாட்சி அம்மாளத்தான் ஆதிரியாரு போட்டு சதும்பி எடுப்பாரு. கெழவிதான் கத்தும்! அடப்பாவி நாசமா போறவனே உட்றா உட்றான்னு கத்தும். படாத இடத்துல பட்டு உயிர் போகுமில்லடா! அடிக்கனுமின்னா மொவள போயி அடி! அதவுட்டான். இவள போட்டு வெதும்பி எடுக்கிறான். அந்த ஓடுகாலி முண்ட எவனாவது மீன்காரனோடதான் ஓடபோறா! அப்படின்னு கத்தும் ஆதிரியாரும் அடிக்காமாலாவுட்டாரு! பத்து வயதுல எற கூடையோட மாமடுவுல எறங்கினா பொண்ணு உம்பளாய். கருவாடாகி வெறா மீனுன்ன அதோட கெவுச்சி கூட ஒரு ருசியாச்சே! மீனுல கவுச்சி போச்சுன்னா அப்புறம் ஏது ருசி! அப்பிடின்னு உம்பளாய்ச் சொல்றதைக் கேட்டு அவங்க அம்மா மீனாட்சி வெளக்கமாத்து கட்டையை எடுத்துகிட்டு "நாக்கு ஆவாதடி! இல்லன்னு கவுச்சிபோயி மீனு ருசின்னு நக்குவியா நீ? நீ உருப்புடமாட்டாயா. ஒரு நல்ல களியாக முண்டன் ஒருத்தன் வந்து மிதிக்கிற மிதில இந்த் வெறாமீனு கெரஞ்சுபோற மாதிரி நீயும் கெரஞ்சி போவனும். இல்லனுன்னா காலையிலே பரிகூடையோட வயல்ல இறங்கவேண்டியதுதான் 'மாயி நாங்களும் வர்ரமே ஆயி!' என்றபடியே பள்ளப் பயலுவ கூடவே சேத்துல இறங்கிடுவானுவ! இப்ப பெரிய பயனுவளும் அவளோட சேத்துல நின்கிறானுவ! ஆதிரியாருக்கு சாகலாமான்னு கூட வரும். உம்பளாய்ன்னு ஒரு பேய் அலறல் அலறிகிட்டு உடியாருவாரு, அப்புறம் உம்பளாய்ப் பாக்க முடியாது. சீலையை வரிஞ்சுகிட்டு தண்ணில குதிச்சா காவேரில எதிர்கரையில போய் ஏறிடுவா! ஆத்துக் குறுக்கால ஒண்ணற மையிலு நீயிறதுண்ணனு ஆம்பளைகளுக்கு தெணறும்போது மூச்சு வாங்கும். முழு ஆத்துலயும் தண்ணி ஏறி கூழை அசையும். தெறந்து வாங்க தண்ணி ரெண்டு கூரையையும் மேடேறி நொரை தள்ளி போகும். போதும் உம்பளாய் எங்கையாவது தூண்டில ஒண்ணெப்புடிச்சிக்கிட்டு கழுத்து அளவு தண்ணில நிக்கும். ஆளு உயரத்துக்கு ஒரு மீன் புடிச்சி பள்ள பயலுவோட கரையேத்திவிட்டு நின்னப்போ ஆதரியாரு அவள வெறகு கட்டையால அடிச்சது இன்னும் உச்சந்தலையில தழும்பா இருக்கு. சேலுபெண்டே மீனு அது! ஆதிரியாருக்கே பயம் வந்துட்டது. அவ்வளவு பெரிய மீனு. ஆத்துல் புடிச்சு அவரு பாத்ததே இல்லை! கொளத்துலதான் இப்படி மீனு புடிப்பா! எப்பவும் எப்போதும் பள்ளிகூடத்துல பள்ளப்பயலுக தேவடியா முண்டே பதினாறு வயசுல இப்படியா மீனு புடிப்பா! சாவகாசம்தான் ராத்திரி படுக்கைக்கு வந்து இருட்டு குள்ளாற அவ அம்மா காலடியில் படுத்து கெடப்பா! காலையில எந்திரிச்சோடனே அடி திமுதிமுன்னு

உம்பளாக்கு விழும். கரண்டிக்கா தழும்பு எத்தனை அடிவயத்துல பழுக்க இழுத்திருக்கின்னு அப்பா சொல்லி கதறும் மீனாட்சி. ஒரு தடவ மிதித்த மிதில மூச்சு அடைச்சு போச்சு! உம்பளாக்கு வாகடம் பாக்கிற வைரம் சொல்லிச்சு ''வயசுக்கு வந்த பொண்ண இப்படி மார்ல போட்டு மிதிக்காதீங்க மூச்சுபோன போக்குல போச்சுன்னா அப்புறம் ''வா''ன்னா வருமா'' அப்டின்னுகத்துன அப்புறம்தான்! அடிக்கிறதையே எல்லோரும் நிறுத்துனாங்க. ஜாதகத்துல அவளுக்கு ஜலமுகத்தினு இருக்காமே! சேரங்குளம் அய்யரு சொன்னாரு. எப்பப் பார்த்தாலும் மீனாட்சியம்மாதான் கண்ணுல தண்ணிவுட்டு கதறும். செத்த நேரம்தான்! அப்புறம் சிட்டா எங்கியாவது பறந்திருவா! உம்பளாய பத்து தடவ பொண்ணு பார்க்க வந்துட்டு போட்டானுவ! பொண்ணு புடிக்கலன்னு கல்யாணம் ஆக மாட்டேங்குது! மாமனுவ? வீடு தங்காம மீன் ஊத்தம் போட்டுக்கிட்டு இருக்கிற பொண்ண யாரு கட்டிக்குவா? வீடு தங்காம மதகு ஆறுன்னு ஏறி இறங்கிட்டு இருக்கிற பொண்ணுன்னு எல்லோருக்கும் சிரிப்பா போச்சு. ஆனா மேக்குடியாறு அவள விட்றதுல்ல! களத்துல, வயலுல்ல ஆத்துல, படித்துறையில, வெத்தலக் கொடிக்கால்ல, இருபது கண்ணு சட்டர்ல எங்க பார்த்தாலும் சரிதான் ஒரு லாவு லாவி தூக்கிடுவாரு! மூச்சிலே பயலே! என்று கத்தியபடியே தப்பி ஓடுவாள் உம்பளாய்! உம்பளாய்க்கு ஒரு வெள்ள ராசி வெறா மீனு இருந்தது! யாருக்கும் தெரியாது. அது வய வாய்க்கால் மடு எஞ்சயம் வராது, ஊட்டுகுள்ள உக்காந்து பீராஞ்சி போகுதே மொத படித்துறை அக்ரஹாரம் அந்த ஊரு மொத ஊட்டு சாரநாதன் தான் அது! உம்பளாய் என்ற பேரெக்கேட்டே சிரிடாசிரின்னு சிரிச்சான் அந்த பாப்பார பையன். அது என்ன பேரு 'உம்பளாயி' அப்படின்னு சிரிச்சான். அக்ராரத்துஏட்டி பாப்பானுவ தனியா ஒரு சின்ன கிராமமே கட்டிப் புட்டானுவ நூறு வருஷத்துல கள்ளனுவ வளத்துவுட்ட அக்ரஹாரம்தான் அது! ஓடான வுட்ல அஞ்சினி அலங்காடு காவேரிக்கு எதிர் கூரையில உம்பல் சுத்து பட்டம் முப்பது கிராமத்துக்கும் விசேஷத்துக்கும் எல்லாம் இங்கே இருந்துதான் புரோகிதத்துக்கு போவானுவ! புது அக்ரஹாரத்து பாப்பானுவ. படிக்கிறதுக்கின்னு கரமுண்டானுவனாம், சேண்டாபிரியனுவனாம் இன்னும் நூறு வருடத்துல கொஞ்ச காசையா அழிச்சிருக்கானுவ!? சாமின்னு சொல்லி, பூதம்னு சொல்லி புரோகிதமுன்னு சொல்லி ஜபம், யாகமுன்னு சொல்லி, கொஞ்ச காசையா கரவுட்டுக்கனுவா? இப்ப கிட்டன்சுல அக்ரஹாரத்துக்குள்ள ரெண்டு டாக்டர் எம்.பி.பி.எஸ் வந்துட்டானுவ! ரெண்டும் பாப்பான் யாருஊட்டு காசு? இப்பவும் கள்ளனுவ காசுதான். வைத்தியத்துக்கு குடுக்கிறதும் கள்ளனுவதான். போன வருஷத்திலிருந்து ஊசி போட்டுகிறதுக்கு இங்க வருதுவோ ஜனங்க அப்படின்னா பாரேன்! திருக்காட்டுப்பள்ளி வரைக்கும் வந்த பஸ்சு இப்ப டவுன் பஸ்ஸாகி புது அக்ரஹாரத்துக்கு எதுக்க மேங்கால் வரைக்கும் வந்திருச்சி! ஆனா அந்த பஸ்சு கள்ள குடிக்கி வராது. வெள்ளாள அய்யர் ஊட்டு பஸ்சு கம்பெனி ஆயிடிச்சி. அது பாப்பார குடியவுட்டு அஞ்சினிக்குள் பூந்து கள்ளகுடிக்கி எப்படி வரும்! நூறு வருஷத்து உம்பளாய்குட்டி வயல்ல எறங்கி வெள புடிச்சிகிட்டு திரியிறா, கள்ளனுவ ஊட்டு புள்ளைஇவ!

அக்ரஹாரத்துக்குள்ள வந்து வெள்ளான அய்யர்வூட்டு டவுன் பஸ்ஸில திருக்காட்டுப்பள்ளி போயி நாகசாமி அய்யரு ஐஸ் ஸ்கூல்ல படிக்க பணம் கட்டி அம்பது வருஷமா கோழி முட்டை கோழி முட்டையை வாங்கதுவோ. உம்பளாய்த்தான் பனிரெண்டு வயது வரைக்கும் படிச்சா. அரு என்னாமோ பாப்பாரக் குட்டிய இன்னமும் இன்னமும் புது அக்ரஹாரத்துல இருந்து தஞ்சாவூர் காலேஜுக்கு படிக்க போவுதுவோ டஸ்-டஸ்சுன்னு இங்கிலிசு பேசுதுவோ. உம்பளாய் மாதிரி குட்டியோ காவேரி ஆத்தையும், கூளை அத்தையும் தாண்டி போகவே திருப்பி வராது. பாப்பாரக்குடி ஒண்ணொன்னு இதே பரிசல்ல ஆறு நிறைய தண்ணி போனாலும் கடந்து போயி டெல்லி, கல்கத்தா, பாம்பேயின்னு போயி இடம்மாறி, குடிமாறி கலெக்கடர், டாக்டர், ஆபிஸரு, ஓம்பியரு, முனுசுப்பு, டாக்டர் டிரைவர் அப்டின்னு மாறிக்கிட்டே போன்ப்ப உம்பளாய்க்குட்டி அன்னு மோட்டார் காரையும் அக்ரஹாரத்துக்குள்ள வர்ற பஸ்ஸையும் ஈன்னு இளிச்சிகிட்டு பாத்துக்கிட்டு நிக்கறப்ப சேண்டாபிரியவரும், மழவராயனுவரும் பள்ளி கூடத்துமேல போவமா கீழறெங்கி பாதியிலேயே திரும்பி, திருவாரூருக்கும், திருவிடைமருதூருக்கும், புதுக்கோட்டைக்கும் பொம்பள நாயத்தேடிப் போய்ட்டானுவ. அதுக்குதான் இந்த பஸ்சு காரு கேணி பட்ற, ரேக்களா மாட்டுவண்டி எல்லாம் அஞ்சினிக்குள்ளாற வந்ததே. கள்ளக்குடி பொண்டுவ மயிர இப்படி அறுக்கிறதுக்குத்தான். ரொம்ப குடியில இப்ப வெள்ளப்புடவ கட்டறதக்கூட நிறுத்திட்டாளுவ! தெரியும்லா... உம்பிளாயி சின்ன புள்ளயா இருக்கிறப்ப கட்டுவைரவளம் பாத்துர்ற இருக்கா. இப்ப ஏகப்பட்ட கள்ளக் குடிகோ ரோட்டுக்கு வந்து தஞ்சாவூருக்கு போய்டுச்சி! புதுக்கோட்டையிலும் திருவிடைமருதூரிலும் ஆட்ட காலிவரைக்கு கள்ளனுவ காசு போய் சேர்ந்தது. இப்படித்தான் ராமாஞ்சியம் கெழவி கோழியோட ஒக்காந்து தவுடு பெசங்க வைக்கிறப்ப ஒப்பாரி வைக்க ஆரம்பிச்சா விடிய விடிய ஓயாது. உம்பளாய் தண்ணிலிருந்து புது அக்ரஹரத்து பாத்துக்கிட்டே இருந்தவள்ள அஞ்சியிலே இருந்தாலும் ஒரு பாப்பானுவ !புது அக்ரஹாரத்து லகுந்து சேத்துல இறங்கி பாத்துயிருக்காளா? அக்ரஹாரத்து வூட்டு வூடெல்லாம் படமா நிமிர்ந்து போச்சு. ஊருக்குள்ள கருப்பு கட்சி, சிகப்பு கட்சி எல்லாம் வந்து கொடி குத்திபுடிச்சி பாப்பான் ஒழிக, தமிழன் வாழ்க அப்டின்னு செவுத்துல எல்லாம் கருப்பு கரிய அரச்சு எண்ணெயில கொளப்பி எல்லா பயலுவளும் எழுதி வச்சானுவ. உம்பளாயி அப்போ புடிச்சி சேத்துலதான் நிக்கிறா! வெறா மீனை புடிக்கணுமில்ல? உம்பளாய் மட்டுமல்ல கள்ளப் பயனுவல்ல ரொம்ப பேரு மீனுப் புடிக்கல்லயேதவிர பொம்பள புடிச்சிக் கிட்டுதான் திரிஞ்சானுவ. வயலு வெளஞ்சது! காவேரியும், கூழையாத்துலயும் தண்ணி குறையல. பஞ்சன முடுக்கெல்லாம் நெல்லும் விளைந்தது. அடுத்த நாலஞ்சு மாசத்துல சேத்துக்குள உம்பளாயியோட நண்டும் சிண்டுமாய் நாலு நிக்கும்! செம்பு கையில கையில தூக்கிகிட்டு வய நண்டு புடிக்கும் கள்ளக்குடி வயல்ல எறங்கினாக்க ஆனா உம்பளாய் அவவரைக்கு என்ன கிடைச்சுதோ அதுல ஆனந்தமா இருந்தா. எப்படியும் ஒரு வெற மீனு புடிக்காம வீட்டுக்கு போறதில்லை. வயல்ல வெற

புடிக்கிறதுன்னா ஜில்லா கலெக்டருக்கு ஜில்லாவ புடிக்கிறமாதிரிதான் தெரியுமில்ல. ஆனா யாருக்கு புரியாது உம்பளாக்கி அக்ரஹாரத்துக்குள்ள ஒரு வெள்ளராசி வெறாமீனு இருக்கே அது யாருன்னு தெரியுமா? சாரநாதன் பத்து வருஷத்துக்கு மிந்தி அவள் தூண்டில்ல மாட்டுனவந்தான். திருக்காட்டுப் பள்ளியில் வில்லு வண்டியில ஆதிரியாரு வூட்டுகுட்டி பள்ளிக்கூடத்துல படியோ படின்னு படிச்சுப்புட்டு முட்டை, முட்டையாய் வாங்கிட்டு திரும்பி வரப்ப நீர்க்காவியோட அழுக்கு வேஷ்டி கட்டிக்கிட்டு சாரநாதன் மூச்சு எறக்க எறக்க வண்டி பின்னால் நடந்து வருவானே! அவன் யாரு? பாப்பார பயதானே! ஆச்சர்யமா இருக்கும். அவளுக்கு வெள்ளராசி வெறமீனு. அவன் வெறா மீனுல வெள்ளராசி ருசி இல்ல. ஆனா உம்பளாயிக்கு வெறாமீனுல வெள்ளராசிதான் வேணும். வில்லு வண்டி ஓட்டியாற சாமிநாதன் கண்டியரு சொல்லுவாரு ''ஏ! ஆயி இந்த பயல வண்டியில ஏத்திக்கிருவியாப்பாரு?'' சாரநாதன், பின்னாலேயே ''வேண்டாம் மாமா நா நடந்தே வாரேன்'' அப்பிடிம்பான். ஆனா உம்பளாயி அவன் பார்க்கிற பார்வை உம்பளாய்க்கி மட்டும்தான் தெரியும் புரியும். கண்ணுல இத்தன பார்வை இருக்குதா. அவன் பயப்புட்றது கூட உம்பளாக்கி வெற மீனு பாசையில் புரியும்! கண்ணு ரெண்டும் அவ பாக்காத எடத்தல நோக்கமா பாக்கும்! அது கள்ளப்பய பார்வை கிடையாது! கண்டியரு ஹெ ஹெ ஹெ ஹெய்-ன்னு கத்திக்கிட்டே மாட்டு வால புடிச்சி முறுக்கிடுவாரு. வில்லு வண்டி பறக்கும் சாரநாதன் தூரமாகி போவான். ''பாப்பார பயலுவல்ட ஜாக்கிரதையா இருக்கணும் ஆய்யேய்'' அப்படின்னு ஒரு நமுட்டு சிரிப்போட அவள பாத்து சொல்றது பயமாகவே இருக்கும் உம்பளாய்க்கு. பத்து வருஷத்துல சாரநாதன் உம்பளாய் நெஞ்சுக்குள்ள துள்ளுற வெள்ளராசி வெற மீனு ஆகிப்போனான். சுத்திமுத்தி எங்க பாத்தாலும் வெடமான கள்ளப் பயலுவ மத்தியில அதை ஒளிக்கிறது எவ்வளவு கஷ்டமாக இருந்தது உம்பளாய்க்கி. ஆனா ஒன்று மட்டும் பாவி பட்ட நெஞ்சுக்கு தெரியவே மாட்டேங்குது. மொத மொத முத்து ரத்தினம் கொண்டையாரு வீட்டுல இருந்துதான் மாமாவுக்கு வந்து அவள பொண்ணு கேட்டாங்க. உம்பளாய் பயந்துபோய் அழ ஆரம்பிச்சா? மீனாட்சியம்மா ''ஏண்டி உனக்கு என்னா வந்திருச்சி மாமன் புடிக்கலைன்னா புடிக்கலன்னு சொல்லு. அத வுட்டுவிட்டு அழுது கொட்டுன்னா என்ன அர்த்தம்?'' ''ஏய் தஞ்சாவூர்லேயும் வெண்ணாறு, வெட்டாறு எல்லாம் ஓடுதுடி அங்கேயும் வெற மீனு எல்லாம் கெடக்கும் என்றாள் மச்சினி! பொண்ணு வூடு பாக்க வந்தப்போ முத்து ரத்னம் கூளை ஆத்துக்குள்ள பரிசல் வரும்போது உம்பளாயிய சேத்துக்குள்ள பள்ளனுவளோடேயும், வலையவனோடேயும் நின்னு மடுவுல மீனு மிதிச்சிகிட்டு இருந்தத பார்த்தவுடனேயே பொண்ணு வேண்டான்னுட்டான்! எல்லோருக்கும் பொசுக்குன்னு போயிடுச்சி. அதுக்கு அப்புறம் நாலு மாமனுவ வேண்டாம்னுட்டான். ஆதிரியார் குடி பூரா இதே பேச்சா போச்சு. அப்புறம் மெல்ல மெல்ல மீனு புடிக்க போற குட்டிய எவன் கட்டிக்குவான் அப்டின்ற கேள்வியே எங்க பார்த்தாலும் தெரிஞ்சுது. உம்பளாய்க்கு வேண்டியது வெள்ளராசி கருவெறா. வீடு தங்கினதுல்ல படிப்பு

ஏறல, வீடு பூறா நெல்லு மூட்டையும் துவர மூட்டையும் அடுக்கி கிடந்தாலும் அந்த வெள்ள வெற உம்பளாயிய இழுத்துக்கிட்டே போவுது. தொடதண்டிக்கி அது வளந்திடிச்சி! அக்ரஹாரத்துக்குள்ளே போயி அவள பார்க்க வேண்டியது இல்லை. உம்பளாய்க்கு மனசுக்குள்ள நினைக்க வேண்டியதுதான். ஓடம்பும் வேணும் மனசுக்குள்ள ஒடம்பு வந்திருதே! அதுக்கு என்ன செய்றது. ஒண்ணு இல்லாம ஒண்ணா இல்ல. காலையிலே அவளைப் படித்துறையிலே பார்க்கலாம். அக்ரஹாரத்து சிவன் கோயில் படித்துறை, நாகலிங்க மரத்தடியில் நாகலிங்க பூ பொறுக்கி சேத்துக்கிட்டு இருப்பாள். அந்த பூவை பார்க்கும்போதெல்லாம் உம்பளாய்க்கு பயமா இருக்கும். அவன் மாதிரியே அந்தப் பூவும் வீரியத்தோட நிக்கும். அவளையே நட்டுக்கிட்டு பார்ப்பான் அந்தப் பாப்பான். உம்பளாய்க்கு மனசுக்குள்ள நாகலிங்க பூ பூந்து லிங்கமா நிற்கும். கையிலே ஒரு இங்கிலிஸ் புத்தகத்தை வச்சுகிட்டு உம்பளாய் மாரயே பார்த்துக்கிட்டு இருப்பான். அத்தாம் பெரிய புத்தகத்துல என்னதான் எழுதியிருக்குமோ. படித்துறை மேலச்சுவர்ல பிராமணன் ஒழிக சூத்ரன் என்றால்... என்று எழுதியிருந்தது. அவன் அவள் பார்வை போன திசையில் லேசாக சிரித்தாள். பிராமணன் ஒழிக என்றான். அய்யய்யோ நீங்க பிராமின் ஆச்சே என்றாள் உம்பளாய், ஆமாடி விரால்மீன்தான் என்றான் சாரநாதன். படித்துறையின் கீழ்ப்படிக்கட்டில் நாலு பிராமணர்கள் உக்காந்து ரெண்டு பேருக்கு தர்ப்பணம் செய்வித்துக் கொண்டிருந்தார்கள். கரையோரத்தில் இருந்த கிளுவ மரத்தில் கிளிகள் கீச்கீச் என்றன. நீங்கள் வெற மீன்தான் வெள்ள வெற மீனு என்று சிரித்தாள். கண்ணுக்கெட்டிய தூரம் வரை ஆறு படர்ந்து கிடந்தது. இப்போதெல்லாம் ஆற்றில் கூட தண்ணீர் வரத்து கொறஞ்சுதான் போச்சு. 'சடசடவென்று செங்குத்தாக மீன் கொத்தி ஒண்ணு வந்தது. ஒரே இடத்தில் நின்று சிறகடித்ததைப் பார்த்த உம்பளாய்க்கி மீன் கிடைக்க வேண்டுமே என்ற பதைப்பு. அவனையே பார்த்தாள். சாரநாதன் லேசான வெட்கத்துடன் தலைகுனிந்து நாகலிங்க பூக்குடலையில் எதையோ தேடினான்? 'சல்பபென்று தண்ணீரில் விழுந்து பாய்ந்ததுல மீன்கொத்தியின் அலகில் ஒரு கெண்டை வெள்ளி மினுங்கி பறந்தது.

''ஏட்டி என்னாடி இங்க பாப்பாரப் பயலடே கின்னாரம்'' என்ற குரல் கேட்டு திடுக்கிட்டு திரும்பி பார்த்தபோது மேக்குடியான் சாரநாதனைப் பார்த்து ''என்ன அய்யரே கள்ள குட்டிக்கிட்ட என்னய்ய ஒட்டு கட்டுற. அவெள நான் கட்டிக்கப்போறேன்ய்யா. நீ பாட்டுக்கு கம்பிவுடாதே என்ற முரட்டுத்தனமான மேக்குடியாரின் அசிங்க பேச்சு கேட்டு சாரநாதன் ''மேக்குடியாரே நானா வேண்டாங்கிறன். வேணுமின்னா அவளெ இழுத்துக்கிட்டு போயி தாலிய கட்டும். உமக்கு வேண்டியதுதான் இப்படியொரு பொண்டாட்டி'' என்று கலகலத்துச் சிரித்தான். கசக்குதா வெள்ளத்தோலுப் பாப்பான்தான் வேணுமா. ''உனக்குதான் இனிமே கல்யாணம் கிடையாதே. சேத்து வெற மீனை பாப்பானால புடிக்க முடியுமா? செதில புடிச்சி தூக்கினா எப்படிப்பட்ட வைரமீனும் தலையைப் போட்டுடும் தெரியுமாடி!'' என்ற மேக்குடியாரு பேச்சு

சாரநாதனுக்கு கசந்தது. மனதுக்குள் அழுக்கு தடியன் அவனால் ஒன்றும் முடியாது. அவனுக்கு நன்றாகத் தெரியும். படித்துறையில் விக்கித்து நின்றான் அவன். ''உனக்கு வெற மீன்தான் வேண்டுமா எத்தனை மீன் வேணும் நான் புடிச்சி தரண்டி'' என்றார் மேக்குடியார். கூறை ஆரு பூராவும் தண்ணி வடிஞ்சி கிடக்கு. சேறுதான் இடுப்பு அளவு கிடக்கு. மேக்குடியானுக்கு இரண்டு கையில்லே பத்து கை தெரியும்? பத்து கையிலேயும் ஒரே ஒரு வெற அழுத்திப் புடிச்சா நிண்ட முடியாது, நிமிர முடியாது தெரியும்லே.'' நாகலிங்க மரத்தடியில் இருந்து அங்கே என்ன நடந்தது என்று பார்த்த சாரநாதனுக்கு விக்கித்துப் போயிற்று. உம்பளாயியை தண்ணீரில் இருந்து எவ்வி இடுப்புக்கு மேல் பிடித்து தூக்கிவிட்டார். மேக்குடியார் விளையாட்டு மாதிரி இருந்தாலும் வழக்கமாக மேக்குடியாரை அடிக்கவோ தட்டவோ திமிறவோ முடியவில்லை உம்பளாயியால். திமிறித்துள்ளி சேற்றில் பாதி தண்ணீரில் பாதியுமாய் விழுந்த உம்பளாயியை படித்துறை அய்யர்கள் திரும்பி பார்த்தனர். தண்ணீரில் நீந்த முயன்ற அவளைப் பார்த்து ''ஒழுங்கா வீட்டுக்கு போயி சேரு பிராமண சவகாசம் எல்லாம் வேண்டாம்!'' என்று விளையாட்டுபோல் விசயத்தை போட்டு உடைத்தார். மேக்குடியார் அவனையே பார்த்து தண்ணீரில் இறங்கி நீந்தி சுழலும் மடுவை தாண்டி நீந்திப்போன உம்பளாயியை கண்கொட்டாமல் பார்த்த சாரநாதனை ''அய்யரே'' இந்தக் குரல் உசுப்பியது. ''ஒனக்குத்தான் பொண்ணு அமெரிக்காவுல படிக்குதே அப்புறம் யாய்யா மீனைத் திங்கற கழுதைகிட்ட...'' என்ற மேக்குடியாரின் பேச்சு படித்துறை பிராமணர்களையும் உசுப்பிதான் விட்டது. தூரத்தில் போய்கொண்டிருந்த விரால்மீன் ஒன்று சேற்றில் துள்ளியது சாரநாதனுக்குப் புரியவில்லை.

## 2

தலையில் இருந்து தீ மாதிரி வியர்வை கீழே காந்தலாக இறங்கிக் கொண்டிருந்தது. உம்பளாயின் மேல் இந்த ஒத்தக் கண்ணு கருவராசி ஒத்தக் கண்ண வச்சுக்கிட்டு அவள இந்த ஓட்டு ஓட்டியது அவளுக்குத் தாங்கவில்லை. நாள் முழுவதும் சேற்றிலேயே நிற்கிறது. அவளுக்கு புதுசு இல்லை. இதையெல்லாம் ஒரே ஒரு மீனுக்காகன்னு நினைக்கும்போது தாங்க மாட்டேங்கிது. பங்குனி வெயில் கோடு கோடாக வெள்ளைத் தடி ஒன்றை குறுக்கும் நெடுக்குமாய் சுழற்றி அடிப்பது போல் இருந்தது. அவளுக்கு மனசு முழுக்க பாரம் - ''இன்னும் எத்தனை நாளக்கி தாண்டி ஆட்டலயே ஒக்காந்து ஆட்டை தேய்க்கப் போற'' என்றது ராமாஞ்சியம் அப்பாயியின் குரல்! பாலத்தடி நைனாபாய் கடையில் மண்ணெண்ணெய் வாங்கி வர காசு நீட்டும்போது நைனாபாய் கையைப் பிடித்து வாங்குகிறான்! பரிசல்காரன் தடி சோணாசலம் காரணமே இல்லாமல் தானே ஏறிக்கொள்ளும்போது இடுப்பைப் பிடித்து தூக்கி விடுகிறான். பள்ளிக்கூடத்து வாத்தியார் எபனேசர் என்னடி இன்னமா கல்யாணம் ஆகாம இருக்க என்று சொல்லியபடி எங்கேயோ கிள்ளுகிறார். ''ஒண்ணால ஒண்ணும் பண்ண முடியாதடா சாரநாதா இந்த

செறுக்கிய நீ வந்த தூக்க நேரமே இல்லையா ஊரு உலகத்துல எல்லாருக்கும் ஒரு விடிவுகாலம் வந்திருச்சி! இந்த மீன் நாறி செறிக்கிக்கி அது வராது? மிந்தியெல்லாம் மீனுன்னு ஒரு நெனப்புதான் இருக்கும். இப்பல்லாம் மீனோட ஏம் நினைப்பும்தான் மிச்சம். அப்பன் கத்துது. ஆத்தா கூச்சல் போடுது. அப்பாயி தொரத்திக்கிட்டே வருது. உம்பளாயிக்கி காதோரம் நெருப்புகால் வியிது. சேத்துல கானல் வெயில் உருகி வெளி வெளியா வடியுது. மீனு அம்புட்ட பாட காணும். ஒத்தக் கண்ணு சேத்துல எங்கியாவது கருப்பா தெரிஞ்சா போதும், கையில் இருக்கும் வீச்சரிவாளால் ஒரே வீச்சு ரெண்டு துண்டா சேத்துல ரெத்தத்தோடு மிதக்கும். தூரத்துல புளியந்தோப்பு தெரியுது. புளிய மரமெல்லாம் நெளி நெளியாய் பங்குனி கானல்ல அலை அலையாய் நெளியுது. தூரத்துல மேக்குடியாரு பீமன் மாதிரி நிக்கிது. ரொம்ப நேரமா படுகாளிப்பய ஒவ்வொரு நாளும் எங்கியாவது ஒரு எசகுலெ அவளெ மாட்டாம விட்டறது இல்லை! அப்பாகிட்ட சொல்லியாச்சு அம்மாகிட்ட அழுதாச்சி! "நீ ஏண்டி மயிராயி மீனு புடிக்க போற? போறதுனால்தான் அவன் வர்ரான் குறுக்க? தூன்னு காறித்துப்ப வேண்டியதுதானடி? ஆனா ஒண்ணு ஞாபகம் வச்சுக்க. கள்ளன்னா கள்ளன்தான் சின்னது பெரிசுன்னு கிடையாது. வெட்டிப்போட்டா கட்டிக்கிட்டு வரும் ஜாக்ரதையா இருந்து பொழ! உங்கப்பன் உனக்கு கண்ணலாம் செய்து வைப்பாருன்னு எனக்கு தோணலை! அந்தி மசங்கிச்சுன்னா தண்ணிப் போட்டுப்புட்டு வெண்டி பாளையத்தான் கடையில சாக்கனாக்கறி சாப்பிட்டுபுட்டு ராத்திரில வந்து புரள்றதுக்கு வூட்டுக்கு வர்றதோடசரி! ஒக்கா மூணு பேருக்கு கல்யாணம் பண்ணினதோட நெலமெல்லாம் போச்சு! இருக்கிறது சோத்துக்குத்தான் மிஞ்சும். மூங்கி குத்த வெட்டுங்க வெட்டுங்கன்னு சொல்லுக்கிட்டு இருக்கேன். மூங்கில் குத்தலாம் பழுத்து நெளியுது. வெட்டக்காணும். ஒண்ணயலா கட்டி அனுப்பப்போறான் அந்த ஆளு! மேக்குடியான் வந்து பொண்ணு கேட்டா மிடியாதுன்னு அனுப்ப சத்து இல்லடி! ஆமா! குடும்பம் எந்த கெதில இருக்குதுன்னு தெரிஞ்சிக்க. மீனு தேடிக்கிட்டு சேத்துக்குப்பில் பொதைஞ்சிறாத. வுட்டுட்டு வூட்ல அடங்கி பொண்ணா உக்காரு. இல்ல, மேக்குடியான் வந்து பொண்ணு கேட்டான்னு வையி? ஓங்கப்பனுக்கு வெல என்ன தெரியுமா ரெண்டு முட்டி சாராயம். நாலு துண்டு செம்புவி ஆட்டுக்கறி. அடுத்த நாள் கோயில்ல முகூர்த்தம் வச்சு படித்துறையில் கல்யாணம் பண்ணிப்புடுவானுவ ஆம்மா'' என்பாள் அம்மாச்சிகாரி! ''ம் செய்வான் செய்வான் இந்த வேலையெல்லாம் மேக்குடியான் வச்சுக்கிட்டான் வீச்சருவாள எடுத்து ஒரே வீச்சுதான். அறுபது வயது கெளப்பயலுக்கு பொண்ணாடி பாக்குறீங்க. உட்டா மேஞ்சிற மாட்டிய மேஞ்சு? ஏங் கண்ணான ஓம் பேத்திக்கி கடக்குட்டி வைரத்துக்கு டெல்லி மாப்ள கொண்டாருவான்டி தெரியும்லடி நாயிங்களா?'' சுருட்டைப் பிடித்துப், பப் என்று புகை விட்டுக் கொண்டு ராமாஞ்சியம் கெழவி மீனாட்சியம்மாளைப் பார்த்து. அப்படியே குப்புறவிழுந்து அழ வேண்டும் போல் இருந்தாலும் உம்பளாய் அழவில்லை. அழுகிறது உம்பளாய்க்கு முடியாது. அடக்க

மாட்டாமல் கோபம் வருமே! உம்பளாய் அழுகிற பொண்ணு இல்ல. ஆனால் அம்மாளுக்கு கிட்டன்சுல மேக்குடியார் மேல ஒரு ''இது'' இருக்கத்தான் செய்யது. ஒன்னு மேக்குடியாரு ''ஏண்டி ஆளு, நாலு பொண்டாட்டி கட்டி புள்ளையெல்லாம் கரையேத்திவுட்ட. ஆனா பொண்ணெல்லாம் கட்டி குடுத்தாச்சு. பொண்டாட்டியிலெ ஒருத்தியும் உசிரோட இல்லை. இந்தக் கரையிலயும், கூளை ஆத்து எதிர் கரையிலயும் நஞ்சையும் புஞ்சையுமா ஏழு வேலி, மூணு போகம்! தோப்பு வாழக்கொல்ல எல்லாம் இருக்கு, மாமரமும் இருக்கு. முடியாதுன்னு நம்ப சொல்லலாம் ஊர்ல இந்தப் பேச்சும் இருக்கும்! மேக்குடியாருக்கு அந்த வெறா குட்டி மேல கண்ணுடா அப்படின்னு எளவட்டப் பசங்க கேலி பேசுவனுங்களே தவிர, வூடேறி வந்து பொண்ணு கேக்க மாட்டான். அவனும் ஊர்ல பெரிய தலக்கட்டு''.

ஆதிரியாரு குடும்பம். ஆனா பணம் வாங்காம எந்தக் கள்ளன் கட்டப்போறான்? மிச்ச சொச்சத்த வித்தாதான் கல்யாணமுன்னு காத்திக் கிட்டுருக்கு. அதே யோசிக்கும் போதே பறி கூடையை எடுத்துக்கிட்டு ஊத்தம் போட்டுடக் கிளம்பிடுவா உம்பளாய். நீ என்னடி வலச்சியா மீன் புடிக்க போறீயே - அப்டிங்கறர்னுவளே ஒரு தாலிய கட்டி கிட்டிக்கிட்டு போங்களண்டா. வேணும்னாடா மீனு புடிக்கிறேன்! மீனு புடிக்காம இருக்க முடியலேடா. ஒருத்தன் ஒருத்தனா வர்ரான். ஏய்யா இது நம்ம வூட்டு ஆயியா!! அட்டிங்கிறான் - இது என்ன ஜாக்கெட் போட காணும்! புத்தி போகுது பாரு பயலுவளுக்கு தாயழி? ஒங்க ஓயும், ஒங்க பாட்டியும் ஜாக்கெட்டு போட்டுக்கிட்டு இருந்தாளுவ? நாளு பூரா கூழை ஆத்து சேத்துல வெலாங்கு புடிக்கிறானுவ. வலையனுவ அவனுங்க எதுனாச்சும் போட்டுக்கிட்டா மீன் புடிக்கிறானுவ. தண்ணிக்குள்ள மொழப்புடவையை சுத்திக்கிட்டு நின்னுப்பாரு நீயே முடியுமான்னு... மனசு அதங்கியது இப்படி.

''பட்டி முண்டெ ஒன்னே வெடி மீன் புடிக்கச் சொல்றது? திலும்பியும், திலும்பியும் அதயே பேசிக்கிட்டு எளவெடுக்க வேண்டியதா இருக்கு. கால முறிச்சு போடப்போறேன். வீட்டோட கிட அந்த வெற மீனு திங்கிற நாக்க இழுத்து வச்சி அறுத்தா மீன்கார சிண்டான் தஞ்சாவூருக்கே மீனு அனுப்புறானே அவங்க கிட்ட கூட சொல்லி பாத்துச்சு. தெனம் நாலு மீன கொண்டாந்து போட்டர்றான்னு. போடாமயா இருந்தான்! அந்த மீனு வேண்டாமாமன்ல்ல நல்லா இல்லயாம். சேத்து மீனு வேறயாம். ஆத்து மீனு வேறயாம். ஒக்காள இப்படியுமா இருக்கும் ஒரு பொண்ணு''! என்று பொலம்பி தீர்த்தது ராமாஞ்சியம் கௌவி! சேத்துக்குள் மீனு நீயும்மா? நெளியுமா? யாரால சொல்ல முடியும். ஆராமீனு பொதையும் கேள்விப்பட்டிருக்கிறோம். கொரவ பொதையும் தலையைமட்டும் சேத்துக்கு மேல் நீட்டிக்கும். வெள்ள உளுவ சேத்துல அலையும் ஆளு வெற மீனு ஒன்னுதான். சேத்துல மேயும். பொதையும் லேசுல சாவாது. அடிச்சப் போட்டாலும் மூணு நாளு ஆகும். சாவு லேசுல வராது. கொழம்புக்கு ஒரசுணாக்கூட மனுஷ உடம்பிலிருந்து ரத்தம் வடியிற மாதிரிதான். வெட்டித் துண்டுபோட்டாக்கூட கொழம்பு

சட்டிக்குள்ளேயிருந்து வெளியே துள்ளிக்குதிக்கிற மீனு வெற மீனுதான்! உம்பளாய் நடு முதுகிலிருந்து ஒத்த கோடா ரத்தம் மாதிரி வேர்வை மெதுவா வடிஞ்சு சேத்துல எறங்குது. தொடை இடுக்கியெல்லாம் ஆறா மீனு புடுங்கியது. சேத்துல இருக்கிற பாசி கவுச்சி மூக்கைத் துளைக்கிது.

ராமசாமி இந்த கோலத்தில் அவள பார்த்து பிடாரிகோவில் நடயில் இருந்து எழுந்து பாய்ந்தபடியே, ''ஏய் உம்பளாய் குட்டி இன்னைக்கு தோகூர் கிருஷ்ணன் கோவில்ல தலிக உர்ஷகம் வெண்ணெய் தாழி திருவிழா என்னோட வருவாயா. உனக்கு பாடி ஜாக்கெட் டுபய்ட் டுபயட் சாரி எல்லாம் வாங்கிதாரன். குச்சி முட்டாயும் வாங்கித்தாரேன்'' என்றபடியே எட்டி அவள் கையைப் பிடித்தான். சாராயம் விற்போருக்கு அவன்மேல் கமரகை வீசியது. அப்படியே உதறி தள்ளிவிட்டு பாய்ந்து வரப்பின் மேல் கால்வாயில் விழுந்து எழுந்து ஓடும்போதும் உம்பளாய்க்கு பின்னால் ''ஏய் நில்லுடி எவன்டி ஒன்னை தாலி கட்டி கட்டிக்கிப்போறான். மரியாதையா வந்துரு'' என்று குச்சாலும் துரத்தி ஓடிவருகிற திமு திமு என்கிற காலடி ஓசைகளும் அவள் நெஞ்சை அடைத்து கதற வைத்தன என்றாலும் பாய்ந்து தலைதெறிக்க ஓடினாள் உம்பளாய். வளியார் முழிகதொட்டத்தை வரப்பில் ஒதிக்கி லேசான அந்தி போலதில் தாண்டி ஓடும்போது ''ஏன்னாஏன் இப்படி தலைதெறிக்க ஓடியார என்று'' கேட்டபடியே மலைபோல் குறுக்கே நின்று சிலம்பகழிய குறுக்கே நீட்டி வரப்பில் துரத்தி ஓடிவருகிற கும்பலை எதிர்த்து நின்றார் மேக்குடியார். சிலம்பகழிகள் சுழல ஆரம்பித்தவுடனேயே கிழக்கு ராமசாமி கும்பல் சிதறி ஓடியது. மறுகையில் லாவி உம்பளாயிய எட்டி பிடித்தார் மேக்குடியார். ஓங்கி முதுகில் அவளை முரட்டுத்தனமாக அறைந்தார். திமிராடி உனக்கு அடுத்தவாரம் ஒண்ண கட்டிக்கப்போறேன். ஒப்பன் சொல்லலையா பரிசம் போடவும் உங்க ஆய்கிட்ட பணம் குடுத்திட்டேன். இனிமே இந்த வயகாடு சுத்திறது. மீனு புடிக்கிறது, இந்த பயலுவலோட சுத்தறது எல்லாத்தையும் வுட்டுட்டு மருவாதியோட எனக்கு சோறு சமைச்சுபோட தயாரா இரு இல்லைன்னா முதுகுதோல் உரிஞ்சிடும்.

ஏய்யா மேக்குடியாரே! இது நோக்கு நன்னாயிருக்கா? எந்த வயசுல என்ன பண்றடா? என்ற ஆணித்தரமான வேற்றினக் குரல் கேட்டு உம்பளாயியும் மேக்குடியாரும் திடுக்கிட்டு திரும்பி பார்த்தனர். எதிரே வெள்ளை ராசி சாரநாதன்.

''போடா பாப்பாரப் பயலே! இவளைத் தேடிக்கிட்டு இங்கே வந்தியாக்கும். ஊசபருப்புப் பயலே! இவ அம்ப பொண்டாட்டிடா. நான்தான் கட்டிக்கப் போறேன். தெரியுமா? வர தையிலே கல்யாணம் அப்பன்கிட்ட பரிசுப்பணம் கொடுத்துட்டேன். இதுல எல்லாம் நீ தலையிடாதடா மவனே. முதுகு தோலு உறிஞ்சிபோகும்'' என்றாரே தவிர, பேச்சில் வன்மம் இல்லை. பகை இல்லை. விளையாட்டாகவே சொல்ல வேண்டியதையும் சொல்லிவிட்டார், மேக்குடியார். அவளை விடவும் இல்லை. விலகவும் இல்லை. அடச்சீ வுடு நீ மனுஷனாட்டாம் என்று சொல்லி பதட்டப்பட்ட உம்பளாயியை மீண்டும்

ஒருமுறை முகர்ந்தார் மேக்குடியார். சாரநாதனுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. கண்ணெதிரே நடக்கும் கோளாறை அந்த கோமளமான பையனால் எதுவும் செய்ய முடியாதென்று அவளுக்கெங்கே தெரியப்போகிறது? அடச்சீ வுடு என்று கத்தியபடியே உதறியபடி வயல் வரப்பில் ஓடினாள் உம்பளாய்.

''ஐயரே! ஒனக்கு இது மூணாவது தடவை. உம்பளாயியத் தேடிக்கிட்டு இங்கெல்லாம் வராதேய்யா. நல்லதுக்கு சொல்றேன், இந்த மீன் நாறி சிறுக்கிய ஊர்கோலி திரியறத வுட்டுபுட்டு போயி காலேஜ்ல படிக்கிற வேலையைப் பாருய்யா'' என்ற மேக்குடியாரின் ஓங்கரித்த குரல் உம்பளாயியின் பின்னலிருந்தும் துரத்தியது.

அவள் சேற்றையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள். அடுத்த வெள்ளிக்கிழமையன்று செண்பக அடவி தோட்டத்தில் செண்பகப்பூ சேகரிக்க உம்பளாயி போனபோது கண்டபிள்ளை வீட்டு ஜானகி, சுப்பையா ரெட்டியார் மகள் துர்கா, கரமுண்டார் வீட்டு பெண் லட்சுமி எல்லோரும் காலை நேரத்தில் கூட அவளோடு நடக்க மறுத்துவிட்டார்கள். இந்த மீன் கவுச்சியினால் அவர்கள் வேகமாக முன்னே ஓடுவதும் பின்னால் துரத்திக் கொண்டே உம்பளாயி ஓடுவதும் ஒரு ஓடிப்புடிச்சி விளையாட்டுப்போல மூச்சு வாங்கியது. அன்றைக்கும் ராத்திரி எட்டு மணிக்குத்தான் வூட்டுக்கு செங்கல் ஏறினாள் உம்பளாயி. அவள் கொண்டு போயிருந்த ஆறு வெறா மீனையும் கொஞ்சம்கூட முக்காமல் முனையாமல் உரசி கழுவி துண்டு போட்டு கொல்லைப் புறத்தில் மூன்று கல் வைத்து அடுப்பில் ராமாஞ்சியம் அப்பாயி குழம்பு வைத்து பொரித்து உம்பளாயி நாக்கத் தட்டி சாப்பிடும்போது ராத்திரி மணி பத்து. அப்பா, தம்பி, தங்கை எல்லோரும் முன்னால் தூங்கி கெடந்தார்கள். திண்ணையில் பாடி ஒப்பாரி வைத்து அழுது கொண்டிருந்தது ராமாஞ்சியம். அழுவதில் ஒரு சுரம். பாடுவதில் ஒரு லாவகமும் திருப்தியும் பேத்தியைப் பற்றி பெரிய கனவுகள் ருசிகரமான காட்சிகளில் முழுகியபடி ராமாஞ்சியம் கெழவியினுடைய கனவுகள் இரவு வெகுநேரம் வரை யாரோ கொல்லைப்புற புளியந்தோப்பில் வெள்ளை வேட்டி படபடக்க நிற்பது போலிருந்தது. கனவாகவும் இருக்கலாம் தோப்பு இருண்டு கிடந்தது. இந்தத் தோப்பு படுகைத் தோப்பு. அந்தப்புரம் வெற்றிலைக்கொடிக்கால், அதற்கு அப்புறம் ஆறு. உம்பளாயிக்கு தூக்கம் வரவில்லை. எதிரே தோப்புக்குள் வெள்ளை ராசி. தூக்கி வாரிப்போட்டது உம்பளாயிக்கு. கோடைக்காலம் புழுக்கம் - உம்பளாயிக்கு எப்போதும் இருப்பதில்லை. நாள் முழுவதும் கழுத்தளவு காவேரிச் சேற்றில் இருக்கும் அவளது உடல் சில்லிட்டிருந்தது. வீட்டில் எல்லோருக்கும் பருப்பும், முருங்கைக்காயும், பறங்கிக்காயும் உடம்பில் வியர்வைப் பெருக்கி விட்டிருந்தன. சட்டை அணியாமல் இடுப்புவரை வெற்றுடம்போடு கொடியில் கிடந்த மெல்லிய கதர்துண்டை எடுத்து போர்த்தியப்படி சந்தேக கனவுகளோடு படுகைத் தோப்புக்குள் இறங்கினாள் யாருமறியாமல். பெரிய பெரிய புளிய மரங்கள். மணற்பாங்கான படுகைபூமி. தூரத்தில் சலசலக்கும் ஆறு. கோடையின் வறண்ட காற்று

என்றாலும் ஆறுதலான தென்றல். தோப்புக்குள் அவன் நிற்கிறானோ? இல்லை தோற்றம்தானோ? சாரநாதனை நினைத்தவுடன் கை, கால்களில் மின்சாரம் பாய்ந்தது. வீட்டுக்கு போய் ஜாக்கெட் போட்டுக்கொண்டு வரலாமா? வேண்டாம். எல்லோரும் ஏனென்று கேட்பார்கள். விழித்துக் கொள்வார்கள். உம்பளாயிக்கு சல்லியமாகப் போய்விடும். கதர்துண்டு நெஞ்சோடு இறுகியது. தோப்புக்குள் மனுஷ வாடை. யாருமில்லையா கால்கள் பரபரத்து பாய்ந்தன. மணலில் நடப்பது ஒருவகையில் சிரமாயிருந்தது. மின்னல் வேகம் தோப்புக்குள் ஆற்றின் வெம்மை கலந்த குளிர்க்காற்று. உம்பளாயியை இரண்டு கரங்கள் இறுகித் தழுவித் தூக்கின. மெய்மறந்து போனாள் உம்பளாயி. அவன்தான் சாரநாதனா? மனசு சொல்லொண்ணா ஆனந்தத்தில் மிதந்தது, கற்பூர மணம் தூப தீபநைவேத்ய கோயில் மணமும் அவனிடமிருந்து செல்வக்கலை, கல்விக்கலை இதெல்லாம் கலந்த ஒரு மேல் மட்டத்து சுகமான வாசனை கழுத்தில் ஒரு நவரத்ன மாலை இருளில்கூட பளபளத்தது. அவர்கள் இருவரின் இடையில் இருந்த காற்று உஷ்ணம் காட்டியபோது இடையில் இருந்த கதர்துண்டும் தூரப்போய் விழுந்தது. அவளைப்போலவே சாரநாதனும் வெற்றுடம்போடுதான் இருந்தான் என்பது அனல் பறக்கும் அந்த வேளையிலும் உணர்ந்தாள்.

''என்னையக் கட்டிக்குவாயாடி?

''என்னையக் கட்டிக்குவியா?

ரெண்டு பேரும் சிரித்தார்கள். இருவரும் மணலில் விழுந்தார்கள். சரிந்து கொண்டே ஆற்றுப் படுகையில் உருண்டார்கள். அவளால் நம்ப முடியவில்லை. எத்தனை வருஷம் பயந்தான்கொள்ளியாகவே இருந்தான். துணிந்து விட்டானா? மறுபடியும் நம்பாமல் கேட்டாள்.

''ஏய் எல்லாரையும் ஏய்த்துவிட்டு என்னைக் கட்டிக்குவியா''? இருளில் அந்தக் கருவராசி வெறா மீனான உம்பளாயியை அவன் முறுக்கி எடுத்துக் கொண்டிருந்தான். ''உம்'' ''உம்'' என்ற பதிலைத் தவிர அவனிடமிருந்து வேறு பதிலே இல்லை. ஆனால் அவள் விடாமல் ''டேய் கேக்கிறேன்ல கட்டிக்குவியா? இப்படியே விட்டுவிடுவாயா? வாயில் என்னா கொழுக்கட்டையா வச்சிருக்க? காட்டுத்தனமா இதெல்லாம் பண்ண தெரியுதுல்லே. கேக்கறதுக்கு பதில் சொல்லத் தெரியலியா'' என்று அவன் காதுகளில் உரக்க கத்தியபோது அப்போதுதான் அந்த கோரமான காட்சியை உம்பளாயி கண்டாள். அவள் மார்புகளைச் சுவைத்து அவளைக் கட்டித் தழுவி இயக்கிக் கொண்டிருந்தபோதும் கூட கனிந்து இறங்கிய உயிர் ரசம் பாயும் முன்பு அவன் மூக்கை அருவருப்புடன் அவனே பொத்திக் கொண்டு அவளது நாற்றத்தைத் தவிர்த்துக் கொண்டிருந்த கோரம்தான் அது. அவன் வாய் கட்டிக்குவேன் கட்டிக்குவேன் என்று அலப்பியது. ஆனந்தத்தின் கொடு முடியில் இருந்ததாக கற்பனையில் தன் மார்புகளை அவனுக்கு நிவேதனம் செய்திருந்த அப்படியே நிலைகுத்தி அவளது அருவருப்பை நரகலைத் தின்னும் அவனது அசிங்கத்தைத் திடுக்கிட்டு தவித்து அவனிடமிருந்து குதறும்

வெறுப்புடனும் குரோதத்துடனும் ''போடா! பாப்பார நாயே கம்மனாட்டி! அருவருப்பா இருக்கா தேடி வந்து பொறுக்கும்போது தோணலியா நாத்தம். இனிமே இங்க வந்தியின்னா செருப்படிதான் வுழுவும். நாறுகிறதாக்கும் எந்திரிச்சி ஓடு பொறுக்கி நாயே''! என்று கத்தியபடி அவனது புட்டத்தை பிடித்து உருவி தன்னை அவனிடமிருந்து காப்பாற்றிக் கொள்ள அவன் முறுகிய அணைப்பிலிருந்தும் ஆழ்ந்த புதைப்பிலிருந்தும் அவனைக் காலால் எட்டி உதைத்து தள்ளியபடியே எழுந்து கதர்துண்டை கீழே இருளில் தேடினாள் உம்பளாயி. குப்புற விழுந்துபோன சாரநாதன் இந்த சதியை எதிர்பார்க்கவே இல்லை. அதே நேரத்தில் பலிஷ்டமான உருவம் ஒன்று அவர்கள் இருவரையும் பார்த்தபடி கடந்து சென்றதை லேசாக பாலாவி போல் வீட்டை நோக்கிய ஓடிய உம்பளாயி உணர்ந்தாள். அது அவளைத் தேடிக் கொண்டேயிருக்கிற மேக்குடியார்தான். அதற்குப்பின் வீட்டு கொல்லைப்புறத்திற்கே உம்பளாயி வருவதில்லை. இந்த இரவு சாரநாதனின் அருகாமையில் உணர்ந்த கற்பூரத்தையும் சாம்புராணி துபதீபமணங்களையும் கோயிலையும் அவள் அடியோடு வெறுத்தாள்.

இதோ கோடையின் அக்கினியால் இந்த ஒத்தக்கண் வெறா மீனுக்காக சேற்றில் அலைந்துகொண்டிருக்கிறாள். கண்கள் பொங்கி வடிந்து கொண்டிருந்தன. சேற்றை வாரி கரையில் வீசிக்கொண்டேயிருந்தாள். ஆவேசம் வந்ததைபோல் மடுவிலிருந்த சேறு முழுவதும் கரையேறியதுதான் மிச்சம். அந்தக் கடுவராசி ஒத்தக்கண்ணு வெறா மீனு அகப்படவே இல்லை. சேரிப்பிள்ளைகளெல்லாம் அவளுக்கு உதவியாக சேற்றை சுற்றிலும் வாரி இறைத்தார்கள். கழுத்தளவு சேறு பாதிக்கும் குறைவாக குறைந்துபோனது. பள்ளத்தில் நின்று நிழல் தட்டியதை உணர்ந்தாள் உம்பளாயி. இரண்டு தூண்கள் போன்ற கைகள் கொண்டு அவளை சேற்றில் இருந்து தூக்கியதுரெண்டு கரங்கள். வரப்பில் உட்காரவைத்த பிற்பாடுதான் அது யாரென்று தெரிந்தது. அது மேக்குடியார்தான். உனக்கென்ன இந்த ஒத்தக்கண்ணு மீனு தானே வேணும். இதபார் நான் குத்திதாரேன். ஆனா ஒரு விஷயம். உடனே நான் தாலி கட்டுவேன் சம்மதம்தானா? உம்பளாயின் கண்கள் நிலைக்குத்தி நின்றன. அப்பொழுது அவ்வளவு காணாமல் போயிருந்த அந்த ஒத்தக்கண்ணு ராட்சஷ மீன் மேலே துள்ளியது. சேறு கொதித்தது. கையிலிருந்த நீண்ட வீச்சருவாளால் ஓங்கி வீசினாள் உம்பளாயி. மிக லாவகமாக வெட்டு வீழ்ந்திருக்க வேண்டிய மீன் வெட்டுப் படாமலேயே சேற்றில் பாய்ந்தது. மீண்டும் அதே நேரத்தில் மின்னல் வேகத்தில் குதித்த மேக்குடியாரின் கைத்தடி சேற்றில் எந்த இடத்தில் மீன் விழுந்ததோ அதே இடத்தில் மேக்குடியார் தன் கைப்பிரம்பை பாய்ச்சினார். இறங்கியது கையில் இருந்த தடியை லாவகமாக சேற்றிலிருந்து தூக்கினார் மேக்குடியார். அதில் அவளை ஏமாற்றிய அந்த ஒத்தக்கண்ணு வெறா மீன் ரத்தம் வடிய குத்திச் சிக்கியிருந்தது மட்டுமல்ல இன்னொரு வெறா மீன் வெள்ளை ராசி மீனும் அந்த ஒரே குத்தில் மாட்டியிருந்தது லேசான விஷயம் அல்ல. ரெண்டு மீனையும் உருவி மேக்குடியார் அவளது பறி கூடையில் போட்டார்.

''என்ன சரிதானா? இதே மாதிரி ஒரு குடுவராசி குட்டியத்தான் எனக்கு பெத்தெடுத்தக் கொடுக்கணும்'', என்று மேக்குடியார் சொன்னபோது, வேண்டாமென்றோ, மாட்டேனென்றோ இல்லையென்றோ எதிலும் பட்டுக் கொள்ளாமல் சரியென்றும் சொல்லிவிடாமல் நின்ற உம்பளாயியையும் பார்த்து மேக்குடியார் சொன்னது.

''இனிமே ராத்திரி வேளையில படுக்கைத் தோப்புல ஒன்னையப் பார்த்தேன்னா அதே இடத்துல வெட்டி புதைச்சிடுவேண்டி'' என்றார். உள்வாங்கிய மூச்சு வெளியில் விட்டவாறு ''இனிமே ஏன் அங்கெல்லாம் போகப்போறேன்''? என்று காறித்துப்பியப்படி தூரத்தில் தெரியும் காவிரியில் துள்ளாட்டாம் போடும் வெறா மீன்களை எண்ணியவாறே நடந்த உம்பளாயி கொஞ்சதூரம் வரப்பில் நடக்கவிட்டு சுற்றும் முற்றும் இல்லென்னா ஒரு துள்ளல்ல பரி கூடைய கிழிச்சி வெள்ள ராசி வெரு கூளை ஆத்துல பாஞ்சுடும். பரியோட கழுத்த கிறுக்கி, முறுக்கி கட்டிபுட்டு வதெக்கி கரையேறின உம்பளாயிய கண்ணு ரெண்டும் பளப்பளக்க அப்படியே வாரி முழுங்கிற மாதிரி வெறியோட பார்த்தான் சாரநாதன். கூடைக்குள்ள வெற படபடபடபடங்கும் திமிலடுச்சி துள்ளுள சத்தம் கேக்குது!

''மா! ஆயி மேல ஏறிட்ட மீனுதான் ஆம்புடல்லில்ல'' என்ற சாம்பான் கலியனிடம் ''ஊத்தங்கால பாத்துக்கடா இந்த வர்றேன்'' என்றபடி மேலே வழிந்த சேற்றை இரு கைகளாலும் வழித்துவிட்டு பக்கத்து மணல்மேட்டில் கிடங்குபோட்டு வெட்டியிருந்த ஊற்றுக் கழுங்கில் இறங்கி தண்ணீரை வாரி மேலே அடித்துக் கொண்டு சேற்றை கழுவினாள். நெஞ்சு சொல்ல முடியாத ஆனந்தத்தில் கும்மளி போட்டது. ஊற்றில் வந்த கழுங்கு தண்ணீர் பவுன் உருகிவடிகிற மாதிரி சேற்றையும் அவள் வியர்வையும் கழுவிக்கொண்டு உஷ்ணமாக வடிந்தது அவளுக்கே புரிந்தது. நேரே நிமிர்ந்து பார்த்தாள். அவளையே பார்த்துக்கொண்டு சாரநாதன் தலைமுடி அவிழ்ந்து தொங்கியது. குலை குலையாக சொல்ல முடியாத ஆசை! அந்தப்பிராமணக் கண்களில் உம்பளாயியை உலுக்கியது. என்ன தைரியம் இந்தப் பயலுக்கு ஈரத்தில் மதிய வெயிலின் உஷ்ணம் சூடேறி ஆவி படர்ந்தது. தூரத்தில் உம்பளாயியும் அவளைவிட வெகு தூரத்தில் திரும்பி திரும்பி பார்த்தபடி மணல்மேட்டில் ஏறி கிலுப்பைத் தோப்புக்குள் நுழைவதை பார்த்தபடி சாம்பான் கலியனிடம் ''ஏண்டா ஆயி எங்கடா போவுது! அய்யர பாக்கவா'' என்று போட்ட கூப்பாடு பரியில் துள்ளாட்டம் போட்டுக்கொண்டிருந்த மீன்களுக்கு கேட்கவே இல்லை.

இலுப்ப எண்ணெய்க்கு இப்போதெல்லாம் மவுசு கொறஞ்சு போச்சு! மருந்துக்கு இலுப்பந்தழை புடுங்க வரறவங்கா தவிர இப்ப யாரும் இலுப்பதோப்புல அன்றதே இல்லை. மேக்குடியார் வீட்டு இலுப்பத்தோப்பு அது! ஒரேதாக்கா அறுபது மரம் நிக்கிது. ஆளுயரத்துக்கு கிளுவவேலி கட்டி அடைச்சிருக்கு மூங்கிப் படலயத் தள்ளிகிட்டு என்னா தைரியம் அந்த பாப்பானுக்கு திரும்பி திரும்பி பாத்துகிட்டே உள்ளே போறான் சாரநாதன். பின்னாலேயே உம்ளாயியும் சொல்ல முடியாத பரபரப்போட உள்ளே! நிழல்

இலுப்பத்தழை வாசம் அடர்த்தியான மதிய நேரத்தில் வெளிச்சமும் இலுப்பைத் தலைகளின் மினுமினுப்பும் இருட்டுமாக தோப்பு யாருமில்லாமல் ஹோவென்று ரெண்டு பேரையும் விழுங்கிகொண்டது. நிழலில் ஒளியும், நிழலில் இருளும் பேச்சே இல்லாத மௌனத்தில் உம்பளாயி கைகள் இரண்டையும் பிடித்து நெஞ்சோடு சேர்த்துக்கொண்டாள் சாரநாதனை.

(வெளிவராதது)

